ஞாலம்வியப் பெய்தவரு நற்கனக மிடையெடுத்து
மூலமெனக் கொடுபோந்த வாணியின்முன் னுரைப்பிக்க
நீலமிடற் றவரருளா லுரைதாழப் பின்னுநெடு
மாலயனுக் கரியகழல் வழுத்தினார் வன்றொண்டர். (௧௫௬)

மீட்டுமவர் பரவுதலு மெய்யன்ப ரன்பில்வரும்
பாட்டுவந்து கூத்துகந்தார் படுவாசி முடிவெய்து
மோட்டறுசெம் பொன்னுக்க வொருமாவுங் குறையாமற்
காட்டுதலு மகிழ்ந்தெடுத்துக் கொண்டுகரை யேறினார். (௧௫௭)

கரையேறிப் பரவையா ருடன்கனக மானதெலா
நிரையேயா ளிற்சுமத்தி நெடுநிலைமா ளிகைபோக்கித்
திரையேறும் புனற்சடிலத் திருமூலட் டானத்தார்
விரையேறு மலர்ப்பாதந் தொழுதணைந்தார் வீதியினில். (௧௫௮)

வந்துதிரு மாளிகையி னுட்புகுந்து மங்கலவாழ்த்
தந்தமிலா வகையேத்து மளவிறந்தா ரொலிசிறப்பச்
சிந்தைநிறை மகிழ்ச்சியுடன் சேயிழையா ருடனமர்ந்தார்
கந்தமலி மலர்ச்சோலை நாவலர்தங் காவலனார். (௧௫௯)

அணியாரூர் மணிப்புற்றி னமர்ந்தருளும் பரம்பொருளைப்
பணிவாரங் கொருநாளிற் பாராட்டுந் திருப்பதிகந்
தணியாத வானந்தத் தலைசிறப்பத் தொண்டருடன்
றுணிவாய பொருள்வினவித் தொழுதாடிப் பாடுவார். (௧௬௦)

பண்ணிறையும் வகைபாறு தாங்கியென வெடுத்தருள
புண்ணிறைபு மனக்களிப்பா லுறுபுளக மயிர்முகிழ்ப்பக்
கண்ணிறையும் புனல்பொழியக் கரையிகந்த வானந்த
மெண்ணிறைந்த படிதோன்ற வேத்திமகிழ்ந் தின்புற்றார். (௧௬௧)

இன்புற்றங் கமர்நாளி லீறிலரு மறைபரவும்
வன்புற்றி லரவணிந்த மன்னவனா ரருள்பெற்றே
யன்புற்ற காதலுட னளவிறந்த பிறபதியும்
பொன்புற்றென் றிடவொளிருஞ் சடையாரைத் தொழப்போவார். (௧௬௨)

பரிசனமு முடன்போதப் பாங்கமைந்த பதிதொறுங்
கரியுரிவை புனைந்தார்தங் கழறொழுது மகிழ்ந்தேத்தித்
துரிசறுநற் பெருந்தொண்டர் நள்ளாறு தொழுவதற்குப்
புரிவுறுமெய்த் திருத்தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கணைந்தார். (௧௬௩)

விண்டடவு கோபுரத்தைப் பணிந்துகர மேற்குவித்துக்
கொண்டுபுகுந் தண்ணலார் கோயிலினை வலஞ்செய்து
மண்டியபே ரன்பினொடு மன்னுதிரு நள்ளாறர்
புண்டரிகச் சேவடிக்கீழ்ப் பொருந்தநில மிசைப்பணிந்தார். (௧௬௪)

அங்கணரைப் பணிந்தேத்தி யருளினாற் றொழுதுபோய்
மங்குலணி மணிமாடத் திருக்கடவூர் வந்தெய்தித்
திங்கள்வளர் முடியார்தந் திருமயா னமும்பணிந்து
பொங்குமிசைப் பதிகமரு வார்கொன்றை யெனப்போற்றி. (௧௬௫)

திருவீரட் டானத்துத் தேவர்பிரான் சினக்கூற்றின்
பொருவீரந் தொலைத்தகழல் பணிந்துபொடி யார்மேனி
மருவீரத் தமிழ்மாலை புனைந்தேத்தி மலைவளைத்த
பெருவீரர் வலம்புரத்துப் பெருகார்வத் தொடுஞ்சென்றார். (கசசு)

வரையோடு நிகர்புரிசை வலம்புரத்தார் கழல்வணங்கி
யுரையோசைப் பதிகமெனக் கினியோதிப் போய்ச்சங்க
நிரையோடு துமித்தூப மணித்தீப நித்திலப்பூத்
திரையோதங் கொண்டிறைஞ்சுந் திருச்சாய்க்கா டெய்தினார். (கசஎ)

தேவர்பெரு மான்றன்னைத் திருச்சாய்க்காட் டினிற்பணிந்து
பாவலர்செந் தமிழ்மாலைத் திருப்பதிகம் பாடிப்போய்
மேவலர்தம் புரமெரித்தார் வெண்காடு பணிந்தேத்தி
நாவலர்கா வலரடைந்தார் நனிபள்ளித் திருநகரில். (கசஅ)

நனிபள்ளி யமர்ந்தபிரான் கழல்வணங்கி நற்றமிழின்
புனிதநறுந் தொடைபுனைந்து திருச்செம்பொன் பள்ளிமுதற்
பனிமதிசேர் சடையார்தம் பதிபலவும் பணிந்துபோய்த்
தனிவிடைமேல் வருவார்தந் திருநின்றி யூர்சார்ந்தார். (கசகூ)

நின்றியூர் மேயாரை நேயத்தாற் புக்கிறைஞ்சி
யொன்றியவன் புள்ளுருகப் பாடுவா ருடையவரைச்
சென்றுமுலை கிடர்நீங்கப் பாடியவே ழெழுநூறு
மன்றுசிறப் பித்தஞ்சொற் றிருப்பதிக மருள்செய்தார். (கரு0)

அப்பதியி லன்பருட னமர்ந்தகல்வா ரகலிடத்திற்
செப்பரிய புகழ்நீடூர் பணியாது செல்பொழுதி
லொப்பரிய வுணர்வினு ளினைந்தருளித் தொழலுறுவார்
மெய்ப்பொருள்வண் டமிழ்மாலை விளம்பியே மீண்டணைந்தார். (கருக)

மடலாரும் புனனீடூர் மருவினர்தாள் வணங்காது
விடலாமே யெனுங்காதல் விருப்புறுமத் திருப்பதிக
மடலார்சூ லப்படையார் தமைப்பாடி யடிவணங்கி
யுடலாரு மயிர்ப்புளக மிகப்பணிந்தங் குறைகின்றார். (கருஉ)

அங்கணினி தமர்ந்தருளாற் றிருப்புன்கூ ரணைந்திறைஞ்சிக்
கொங்கலரு மலர்ச்சோலைத் திருக்கோலக் காவணையக்
கங்கைசடைக் கரந்தவர்தா மெதிர்காட்சி கொடுத்தருளப்
பொங்குவிருப் பாற்றொழுது திருப்பதிகம் போற்றிசைப்பார். (கருங)

திருஞான சம்பந்தர் திருக்கைக ளாலொற்றிப்
பெருகார்வத் துடன்பாடப் பிஞ்ஞகனார் கண்டிரங்கி
யருளாலே திருத்தாள மளித்தபடி சிறப்பித்துப்
பொருண்மாலைத் திருப்பதிகம் பாடியே போற்றிசைத்தார். (கருச)

மூவாத முழுமுதலார் முதற்கோலக் காவகன்று
தாவாத புகழ்ச்சண்பை வலங்கொண்டு தாழ்ந்திறைஞ்சி
நாவார்முத் தமிழ்விரகர் நற்பதங்கள் பரவிப்போய்
மேவார்தம் புரஞ்செற்றார் குருகாவூர் மேவுவார். (கருரு)

உண்ணீரின் வேட்கையுட னுறுபசியான் மிகவருந்திப்
பண்ணீர்மை மொழிப்பரவை யார்கொழுநர் வரும்பாங்கர்க்
கண்ணீடு திருநுதலார் காதல்வரக் கருத்தறிந்து
தண்ணீரும் பொதிசோறுங் கொண்டுவழிச் சார்கின்றார். (௧௦௬)

வேனிலுறு வெயில்வெம்மை தணிப்பதற்கு விரைக்குளிர்மென்
பானன்மலர்த் தடம்போலும் பந்தரொரு பாலமைத்தே
யானமறை வேதியரா யருள்வேடங் கொண்டிருந்தார்
மானமருந் திருக்கரத்தார் வன்றொண்டர் தமைப்பார்த்து. (௧௦௭)

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகர்வழி பார்த்திருப்பத்
திருவாரூர்த் தம்பிரான் றோழர்திருத் தொண்டருடன்
வருவாரப் பந்தரிடைப் புகுந்துதிரு மறையவர்பாற்
பெருகார்வஞ் செலவிருந்தார் சிவாயநம வெனப்பேசி. (௧௦௮)

ஆலநிழற் கீழிருந்தா ரவர்தம்மை யெதிர்நோக்கிச்
சாலமிகப் பசித்தீரிப் பொதிசோறு தருகின்றேன்
காலமினித் தாழாமே கைக்கொண்டிங் கினிதருந்தி
யேலநறுங் குளிர்தண்ணீர் குடித்திளைப்புத் தீருமென. (௧௦௯)

வன்றொண்ட ரதுகேட்டு மறைமுனிவர் தரும்பொதிசோ
றின்றுநமக் கெதிர்விலக்க லாகாதென் றிசைந்தருளிப்
பொன்றயங்கு நூன்மார்பர் தரும்பொதிசோ றதுவாங்கிச்
சென்றுதிருத் தொண்டருடன் றிருவமுது செய்தருளி. (௧௧௦)

எண்ணிறந்த பரிசனங்க ளெல்லாரு மினிதருந்தப்
பண்ணியபின் னம்மருங்கு பசித்தணைந்தா ரளுமருந்த
வுண்ணிறைந்த வாரமுதா யொருகாலு முலவாதே
புண்ணியனார் தாமளித்த பொதிசோறு பொலிந்ததால். (௧௧௧)

சங்கரனார் திருவருள்போற் றண்ணீரின் சுவையார்ந்து
பொங்கிவரு மாதரவா லவூர்நாமம் புகழ்ந்தேத்தி
யங்கயர்வாற் பள்ளியமர்ந் தருகணைந்தா ரளுந்துயிலக்
கங்கைசடைக் கரந்தாரப் பந்தரொடுங் தாங்கரந்தார். (௧௧௨)

சித்தநிலை திரியாத திருநாவ லூர்மன்ன
ரத்தருதி யினிற்பள்ளி புணர்ந்தவரைக் காணாமை
யித்தனையா மாற்ற மறிந்திலே னெனவெடுத்து
மெய்த்தகைய திருப்பதிகம் விளம்பியே சென்றடைந்தார். (௧௧௩)

குருகாவூ ரமர்ந்தருளுங் குழகனார் கோயிலினுக்
கருகார்பொற் கோபுரத்தை யணைந்திறைஞ்சி புள்புக்கு
வருகாதல் கூரவலங் கொண்டுதிரு முன்வணங்கிப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகினார். (௧௧௪)

கண்ணார்ந்த வின்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சிப்
பண்ணார்ந்த திருப்பதிகம் பாடியே பணிந்தேத்தி
புண்ணாடும் பெருங்காத லுடையவர்தாம் புறத்தெய்தி
கண்ணார்வத் தொண்டருட னங்கினிது நயர்திருந்தார். (௧௧௫)

அந்நாளிற் றம்பெருமா னருள்கூடப் பணிந்தகன்று
மின்னார்செஞ் சடைமுடியார் விரும்புமிடம் பலவணங்கிக்
கன்னாடு மெயில்புடைசூழ் கழிப்பாலை தொழுதேத்தி
தென்னாவ லூர்மன்னர் திருத்தில்லை வந்தடைந்தார். (கசசு)

சீர்வளருந் திருத்தில்லைத் திருவீதி பணிந்துபுகுந்
தேர்வளர்பொற் றிருமன்று ளாடுத்தசே வடியிறைஞ்சிப்
பார்வளர மறைவளர்க்கும் பதியதனிற் பணிந்துறைவார்
போர்வளர்மே ருச்சிலையார் திருத்தினைமா நகர்புகுந்தார். (கசஎ)

திருத்தினைமா நகர்மேவுஞ் சிவக்கொழுந்தைப் பணிந்துபோய்
நிருத்தனா ரமர்ந்தருளு நிறைபதிகள் பலவணங்கிப்
பொருத்தமிகுந் திருத்தொண்டர் போற்றுதிரு நாவலூர்
கருத்தில்வரு மாதரவாற் கைதொழச்சென் றெய்தினார். (கசஅ)

திருநாவ லூர்மன்னர் சேர்கின்றா ரெனக்கேட்டுப்
பெருநாமப் பதியோருந் தொண்டர்களும் பெருவாழ்வு
வருநாளென் றலங்கரித்து வந்தெதிர்கொண் டுள்ளணையச்
செருநாகத் துரிபுனைந்தார் செழுங்கோயி லுள்ளணைந்தார். (கசகு)

மேவியவத் தொண்டர்குழா மிடைந்தரவென் றெழுமோசை
மூவுலகும் போயொலிப்ப முதல்வனார் முன்பெய்தி
யாவியினு மடைவுடையா ரடிக்கமலத் தருள்போற்றிக்
கோவலனான் முகனெடுத்துப் பாடியே கும்பிட்டார். (கஎ0)

நலம்பெருகு மப்பதியி னுடயவன் பொடுநயந்து
குலம்பெருகுந் திருத்தொண்டர் குழாத்தோடு மினிதமர்ந்து
சலம்பெருகும் சடைமுடியார் தாள்வணங்கி யருள்பெற்றுப்
பொலம்புரிநூன் மணிமார்பர் பிறபதியுந் தொழப்போவார். (கஎக)

தண்டகமாந் திருநாட்டுத் தனிவிடையார் மகிழ்விடங்க
டொண்டரெதிர் கொண்டணையத் தொழுதுபோய்த் தூயநதி
வண்டறைபூம் புறவுமலை வளமருதம் பலகடந்தே
யெண்டிசையோர் பரவுதிருக் கழுக்குன்றை யெய்தினார். (கஎஉ)

தேனார்ந்த மலர்ச்சோலை திருக்கழுக்குன் றத்தடியா
ரானாத விருப்பினொடு மெதிர்கொள்ள வடைந்தருளித்
தூநாள்வெண் மதியணிந்த சுடர்க்கொழுந்தைத் தொழுதிறைஞ்சிப்
பாநாடு மின்னிசையின் றிருப்பதிகம் பாடினார். (கஎங)

பாடியவப் பதியின்க ணினிதமர்ந்து பணிந்துபோய்
நாடியநல் லுணர்வினொடுந் திருக்கச்சூர் தனைநண்ணி
யாடகமா மதில்புடைசூ ழாலக்கோ யிலினமுதைக்
கூடியமெய் யன்புருகக் கும்பிட்டுப் புறத்தணைந்தார். (கஎச)

அணைந்தருளு மவ்வேலை யமுதுசெயும் பொழுதாகக்
கொணர்ந்தமுது சமைத்தளிக்கும் பரிசனமுங் குறுகாமைத்
தணந்தபசி வருத்தத்தாற் றம்பிரான் றிருவாயிற்
புணர்ந்தமதிற் புறத்திருந்தார் முனைப்பாடிப் புரவலனார். (கஎரு)

வன்றொண்டர் பசிதீர்க்க மலையின்மேல் மருந்தானார்
மின்றங்கு வெண்டலையோ டொழிந்தொருவெற் றோடேந்தி
யன்றங்கு வாழ்வாரோ ரந்தணராய்ப் புறப்பட்டுச்
சென்றன்பர் முகநோக்கி யருள்கூரச் செப்புவார். (௧௭௬)

மெய்ப்பசியான் மிகவருந்தி யிளைத்திருந்தீர் வேட்கைவிட
விப்பொழுதே சோறிரந்திங் கியானுமக்குக் கொணர்கின்றே
னப்புறநீ ரகலாதே சிறிதுபொழு தமருமெனச்
செப்பியவர் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்றிரப்பார். (௧௭௭)

வெண்டிருநீற் றணிதிகழ விளங்குநூ லொளிதுளங்கக்
கண்டவர்கண் மனமுருகக் கம்பகற்போ திடும்பலிக்குப்
புண்டரிகக் கழல்புவிமேற் பொருந்தமனை தொறும்புக்குக்
கொண்டுதாம் விரும்பியாட் கொண்டவர்முன் கொடுவந்தார். (௧௭௮)

இரந்துதாங் கொடுவந்த வின்னடிசி லுங்கறியு
மரந்தைதரும் பசிதீர வருந்துமென வளிப்பப்
பெருந்தகையார் மறையவர்தம் பேரருளின் றிறம்பேணி
யிரந்தபெருங் காதலினா னேர்தொழுது வாங்கினார். (௧௭௯)

வாங்கியவத் திருவமுது வன்றொண்டர் மருங்கணைந்த
வோங்குதவத் தொண்டருட னுண்டருளி யுவந்திருப்ப
வாங்கருகு நின்றார்போ லவர்தம்மை யறியாமே
நீங்கினா ரெப்பொருளு நீங்காத நிலைமையினார். (௧௮0)

திருநாவ லூராளி சிவயோகி யார்நீங்க
வருநாம மறையவனா ரிறையவனா ரெனமதித்தே
பெருநாதச் சிலம்பணிசே வடிவருந்தப் பெரும்பகற்க
ணொருநாடி யெழுந்தருளிற் றென்பொருட்டா மெனவுருகி. (௧௮௧)

வேறு.

முதுவா யோரி பென்றெடுத்து முதல்வ னார்தம் பெருங்கருணை
யதுவா மிதுவென் றதிசயம்வந் தெய்தக் கண்ணீர் மழையருவிப்
புதுவார் புனலின் மயிர்ப்புளகம் புதையப் பதிகம் போற்றிசைத்து
மதுவா ரிதழி முடியாரைப் பாடி மகிழ்ந்து வணங்கினார். (௧௮௨)

வந்தித் திறைவ ரருளாற்போய் மங்கை பாகர் மகிழ்ந்தவிட
முந்தித் தொண்ட ரெதிர்கொள்ளப் புக்கு முக்கட் பெருமானைச்
சிந்தித் திடவந் தருள்செய்கழல் பணிந்து செஞ்சொற் றொடைபுனைந்தே
யந்திச் செக்கர்ப் பெருகொளியா ரமருங் காஞ்சி மருங்கணைந்தார். (௧௮௩)

அன்று வெண்ணெய் நல்லூரி லரியு மயனுந் தொடர்வரிய
வென்றி மழுவெள் விடையுயர்த்தார் வேத முதல்வ ராய்வந்து
நின்று சபைமுன் வழக்குரைத்து நேரே தொடர்ந்தாட் கொண்டவர்தா
மின்றிங் கெய்தப் பெற்றோமென் றெயில்சூழ் காஞ்சி நகர் வாழ்வார். (௧௮௪)

மல்கு மகிழ்ச்சி மிகப்பெருக மறுகு மணித்தோ ரணநாட்டி
யல்கு தீப நிறைகுடங்க ளகிலின் றூபங் கொடியெடுத்துச்
செல்வ மனைக ளலங்கரித்துத் தெற்றியாடன் முழவதிரப்
பல்கு தொண்ட ருடன்கூடிப் பதியின் புறம்போ யெதிர்கொண்டார். (௧௮௫)

ஆண்ட நம்பி யெதிர்கொண்ட வடியார் வணங்க வெதிர்வணங்கி
நீண்ட மதிட்கோ புரங்கடந்து நிரைமா ளிகைவீ தியிற்போந்து
பூண்ட காதல் வாழ்த்தினுடன் புனைமங் கலதூ ரியமொலிப்ப
ஈண்டு தொண்டர் பெருகுதிரு வேகாம் பரஞ்சென் றெய்தினார். (௧௮௬)

ஆழி நெடுமா லயன்முதலா மமரர் நெருங்கு கோபுரமுன்
பூழி யுறமண் மிசைமேனி பொருந்த வணங்கிப் புகுந்தருளிச்
சூழு மணிமா ளிகைபலவுந் தொழுது வணங்கி வலங்கொண்டு
வாழி மணிப்பொற் கோயிலினுள் வந்தா ரணுக்க வன்றொண்டர். (௧௮௭)

கைகள் கூப்பி முன்னணைவார் கம்பை யாறு பெருகிவர
வையர் தமக்கு மிகவஞ்சி யாரத் தழுவிக் கொண்டிருந்த
மையு லாவுங் கருநெடுங்கண் மலையா ளென்றும் வழிபடுபூஞ்
செய்ய கமலச் சேவடிக்கீழ்த் திருந்து காத லுடன்வீழ்ந்தார். (௧௮௮)

வீழ்ந்து போற்றிப் பரவசமாய் விம்மி யெழுந்து மெய்யன்பால்
வாழ்ந்த சிந்தை யுடன்பாடி மாறா விருப்பிற் புறம்போந்து
சூழ்ந்த தொண்ட ருடன்மருவு நாளிற் றொல்லைக் கச்சிநகர்த்
தாழ்ந்த சடையா ராலயங்கள் பலவுஞ் சார்ந்து வணங்குவார். (௧௮௯)

சீரார் காஞ்சி மன்னுதிருக் காமக் கோட்டஞ் சென்றிறைஞ்சி
நீரார் சடையா ரமர்ந்தருளு நீடு திருமேற் றளிமேவி
யாரா வன்பிற் பணிந்தேத்து மளவி னுந்தா வொண்சுடராம்
பாரார் பெருமைத் திருப்பதிகம் பாடி மகிழ்ந்து பரவினார். (௧௯௦)

ஓண காந்தன் றளிமேவு மொருவர் தம்மை யுரிமையுடன்
பேணி யமைந்த தோழமையாற் பெருகு மடிமைத் திறம்பேசிக்
காண மோடு பொன்வேண்டி நெய்யும் பாலுங் கலைவிளங்கும்
யாணர்ப் பதிக மெடுத்தேத்தி யெண்ணி னிதிபெற் றினிதிருந்தார். (௧௯௧)

அங்க ணமர்வா ரனேகதங்கா பதத்தை யெய்தி யுள்ளணைந்து
செங்கண் விடையார் தமைப்பணிந்து தேனெய் புரிந்தென் றெடுத்ததமிழ்
தங்கு மிடமா மெனப்பாடித் தாழ்ந்து பிறவுந் தானங்கள்
பொங்கு காத லுடன்போற்றிப் புரிந்தப் பதியிற் பொருந்துநாள். (௧௯௨)

பாட லிசையும் பணியினாற் பாவை தழுவக் குழைகம்ப
ராடன் மருவுஞ் சேவடிகள் பரவிப் பிரியா தமர்கின்றார்
நீட மூதூர்ப் புறத்திறைவர் நிலவும் பதிக டொழவிருப்பான்
மாட நெருங்கு வன்பார்த்தான் பனங்காட் டூரில் வந்தடைந்தார். (௧௯௩)

செல்வ மல்கு திருப்பனங்காட் டூரிற் செம்பொற் செழுஞ்சுடரை
யல்ல லறுக்கு மருமருந்தை வணங்கி யன்பு பொழிகண்ணீர்
மல்க நின்று விடையின்மேல் வருவா ரெனும்வண் டமிழ்ப்பதிக
நல்ல விசையி னுடன்பாடிப் போந்து பிறவு நண்ணுவார். (௧௯௪)

மன்னு திருமாற் பேறணைந்து வணங்கிப் பரவித் திருவல்லந்
தன்னு ளெய்தி யிறைஞ்சிப்போய்ச் சாரு மேல்பாற் சடைக்கற்றைப்
பின்னன் முடியா ரிடம்பலவும் பேணி வணங்கிப் பெருந்தொண்டர்
சென்னி முகிறோய் தடங்குவட்டுத் திருக்கா ளத்தி மலைசேர்ந்தார். (௧௯௫)

தடுக்க லாகாப் பெருங்காத றலைசின் றருளுங் கண்ணப்ப
ரடிக்கண் களைந்தாட் கொண்டருளு மிறைவர் மகிழ்ந்த காளத்தி
யடுக்கல் சேர வணைந்துபணிந் தருளா லேறி யன்பாறு
மடுப்பத் திருமுன் சென்றெய்தி மலைமேன் மருந்தை வணங்கினார். (௧௯௬)

வணங்கி புள்ளங் களிகூர மகிழ்ந்து போற்றி மதுரவிசை
யணங்கு செண்டா டெனும்பதிகம் பாடி யன்பாற் கண்ணப்பர்
மணங்கொள் மலர்ச்சே வடிபணிந்து வாழ்ந்து போந்து மன்னுபதி
யிணங்கு தொண்ட ருடன்கெழுமி யின்புற் றிருக்கு மந்நாளில். (௧௯௭)

வடமா திரத்துப் பருப்பதமுந் திருக்கே தார மலைமுதலா
விடமா வரனார் தாமுவந்த வெல்லா மிங்கே யிருந்திறைஞ்சி
நடமா டியசே வடியாரை நண்ணி னார்போ லுண்ணிறைந்து
திடமாங் கருத்திற் றிருப்பதிகம் பாடிக் காதல் சிறந்திருந்தார். (௧௯௮)

அங்குச் சிலநாள் வைகியபின் னருளாற் போந்து பொருவிடையார்
தங்கு மிடங்க ளனைப்பலவுஞ் சார்ந்து தாழ்ந்து தமிழ்பாடிப்
பொங்கு புணரிக் கரைமருங்கு புவியுட் சிவலோ கம்போலத்
திங்கண் முடியா ரமர்ந்ததிரு வொற்றி யூரைச் சென்றடைந்தார். (௧௯௯)

அண்ண றொடர்ந்தா வணங்காட்டி யாண்டநம்பி யெழுந்தருள
வெண்ணில் பெருமை யாதிபுரி யிறைவ ரடியா ரெதிர்கொள்வார்
வண்ண வீதி வாயிறொறும் வாழை கமுகு தோரணங்கள்
சுண்ண நிறைபொற் குடந்தூப தீபமெடுத்துத் தொழவெழுங்கால். (௨௦௦)

வரமங் கலநல் லியமுழங்க வாச மாலை யணியரங்கிற்
புரமங் கையர்க ணடமாடப் பொழியும் வெள்ளப் பூமாரி
யரமங் கையரு மமரர்களும் வீச வன்ப ருடன்புகுந்தார்
பிரமன் றலையிற் பலியுவந்த பிரானார் விரும்பு பெருந்தொண்டர். (௨௦௧)

ஒற்றி யூரி லுமையோடுங் கூட நின்றா ருயர்தவத்தின்
பற்று மிக்க திருத்தொண்டர் பரந்த கடல்போல் வந்தீண்டிச்
சுற்று மணைந்து துதிசெய்யத் தொழுது தம்பி ரானன்பர்
கொற்ற மழவே றுடையவர்தங் கோயில் வாயி லெய்தினார். (௨௦௨)

வானை யளக்குங் கோபுரத்தை மகிழ்ந்து பணிந்து புகுந்துவளர்
கூன லிளவெண் பிறைச்சடையார் கோயில் வலங்கொண் டெதிர்குறுகி
யூனு முயிருங் கரைந்துருக வுச்சி குவித்த செங்கையுட
னான காத லுடன்வீழ்ந்தா ராரா வன்பி னாரூரர். (௨௦௩)

எட்டு வரியி லொற்றியூர் நீங்க லென்ன வெழுத்தறியு
நாட்ட மலருந் திருநுதலார் நறும்பொற் கமலச் சேவடியிற்
கூட்டு முணர்வு கொண்டெழுந்து கோதி லமுத விசைகூடப்
பாட்டும் பாடிப் பரவியெனும் பதிக மெடுத்துப் பாடினார். (௨௦௪)

பாடி யறிவு பரவசமாம் பரிவு பற்றப் புறம்போந்து
நீடு விருப்பிற் பெருங்காத னிறைந்த வன்பர் பலர்போற்றத்
தேடு மயனுந் திருமாலு மறிதற் கரிய திருப்பாதங்
கூடுங் காலங் கனிவினைந்து பரவிக் கும்பிட் டினிதிருந்தார். (௨௦௫)

இந்த நிலைமை யாரிவரிங் கிருந்தார் முன்பே யிவர்க்காக
வந்தண் கயிலை மலைநீங்கி யருளாற் போந்த வகிந்திதையார்
வந்து புவிமே லவதரித்து வளர்ந்து பின்பு வன்றொண்டர்
சந்த விரைசூழ் புயஞ்சேர்ந்த பரிசு தெரியச் சாற்றுவாம். (உ0௬)

நாலாங் குலத்திற் பெருகுல முடையார் வாழு ஞாயிற்றின்
மேலாங் கொள்கை வேளாண்மை மிக்க திருஞா யிறுகிழவர்
பாலா தரவு தருமகளா ராகிப் பார்மே லவதரித்தா
ராலா லஞ்சேர் கறைமிடற்று ரருளான் முன்னை யநிந்திதையார். (உ0எ)

மலையான் மடந்தை மலர்ப்பாத மறவா வன்பால் வந்தநெறி
தலையா முணர்வு வந்தணையத் தாமே யறிந்த சங்கிலியா
ரலையார் வேற்கட் சிறுமகளி ராயத்தோடும் விளையாட்டு
நிலையா யினவப் பருவங்க டோறு நிகழ நிரம்புவார். (உ0அ)

சீர்கொண் மரபில் வருஞ்செயலே யன்றித் தெய்வ நிகழ்தன்மை
பாரி லெவரு மதிசயிக்கும் பண்பில் வளரும் பைந்தொடியார்
வாரு மணிய வணியவாம் வளர்மென் முலைக ளிடைவருத்தச்
சாரும் பருவத்திற் றந்தையார் தங்கண் மனைவி யார்க்குரைப்பார். (உ0௯)

வடிவுங் குணமு நம்முடைய மகட்கு மண்ணு ளோர்க்கிசையும்
படிவ மன்றி மேற்பட்ட பரிசாம் பான்மை யறிகிலோங்
கடிசேர் மணமு மினிநிகழுங் கால மென்னக் கற்புவளர்
கொடியே யனைய மனைவியா ரேற்கு மாற்றாற் கொடுமென்றார். (உ௧0)

தாய ரோடுந் தந்தையார் பேசக் கேட்ட சங்கிலியா
ரேயு மாற்ற மன்றிதுவெம் பெருமா னீசன் றிருவருளே
மேய வொருவர்க் குரியதியான் வேறென் விளையு மெனவெருவுற்
றாய வுணர்வு மயங்கியக வயர்ந்தே யவனி மேல்விழுந்தார். (உ௧௧)

பாங்கு நின்ற தந்தையார் தாயார் பதைத்துப் பரிந்தெடுத்தே
யேங்கு முள்ளத் தினராகி யிவளுக் கென்னோ வுற்றதெனத்
தாங்கிச் சீத விரைப்பனிநீர் தெளித்துத் தைவந் ததுநீங்க
வாங்கு நசுப்பின் மகளாரை வந்த துனக்கிங் கென்னென்றார். (உ௧உ)

என்று தம்மை யீன்றெடுத்தார் வினவ மறைவிட் டியம்புவா
ரின்றென் றிறத்து நீர்மொழிந்த விதுவென் பரிசுக் கிசையாது
வென்றி விடையா ரருள்செய்தா ரொருவர்க் குரியேன் யானினிமேற்
சென்று திருவொற் றியூரணைந்து சிவனு ரருளிற் செல்வனென. (உ௧௩)

அந்த மாற்றங் கேட்டவர்தா மயர்வும் பயமு மதிசயமும்
வந்த வுள்ளத் தினராகி மற்றமாற்ற மறைத் தொழுகப்
பந்த நீடு மிவர்குலத்து நிகரா மொருவன் பரிசறியான்
சிந்தை விரும்பி மகட்பேசி விடுத்தான் சிலருஞ் சென்றிசைத்தார். (உ௧௪)

தாதை யாரு மதுகேட்டுத் தன்மை விளம்பத் தகாமையினு
லேத மெய்தா வகைமொழிந்து போக்க வவராங் கெய்தாமுன்
நீதங் கிழைத்தே யிறந்தான்போற் செல்ல விடுத்தா ருடன்சென்றான்
மாத ராரைப் பெற்றார்மற் றதனைக் கேட்டு மனமருண்டார். (உ௧௫)

தைய லார்சங் கிலியார்தந் திறத்துப் பேசுந் தகாவார்த்தை
யுய்ய வேண்டு நினைவுடையா ருரையா ரென்றங் குலகறியச்
செய்த விதிபோ லிதுநிகழச் சிறந்தார்க் குள்ள படிசெப்பி
நையு முள்ளத் துடனஞ்சி நங்கை செயலே யுடன்படுவார். (௨௧௬)

அணங்கே யாகு மிவள்செய்கை யறிந்தோர் பேச வஞ்சுவரால்
வணங்கி யீசர் திறமன்றி வார்த்தை யறியாண் மற்றென்று
குணங்க ளிவையா மினியிவடான் குறித்த படியே யொற்றிநகர்ப்
பணங்கொ ளரவச் சடையார்தம் பாற்கொண் டணைவோ மெனப்பகர்வார். (௨௧௭)

பண்ணார் மொழிச்சங் கிலியாரை நோக்கிப் பயந்தா ரொடுங்கிளைஞர்
தெண்ணீர் முடியார் திருவொற்றி யூரிற் சேர்ந்து செல்கதியுங்
கண்ணார் நுதலார் திருவருளா லாகிக் கன்னி மாடத்துத்
தண்ணார் தடஞ்சூ ழந்நகரிற் றங்கிப் புரிவீர் தவமென்று. (௨௧௮)

பெற்ற தாதை சுற்றத்தார் பிறைசேர் முடியார் விதியாலே
மற்றுச் செயலொன் றறியாது மங்கை யார்சங் கிலியார்தாஞ்
சொற்ற வண்ணஞ் செயத்துணிந்து துதைந்த செல்வத் தொடும்புரங்கள்
செற்ற சிலையார் திருவொற்றி யூரிற் கொண்டு சென்றணைந்தார். (௨௧௯)

சென்னி வளர்வெண் பிறையணிந்த சிவனார் கோயி லுட்புகுந்து
துன்னுஞ் சுற்றத் தொடும்பணிந்து தொல்லைப் பதியோ ரிசைவினாற்
கன்னி மாட மருங்கமைத்துக் கடிசேர் முறைமைக் காப்பியற்றி
மன்னுஞ் செல்வர் தகவுகுத்துத் தந்தை யார்வந் தடிவணங்கி. (௨௨௰)

யாங்க ளுமக்குப் பணிசெய்ய வீசற் கேற்ற பணிவிரும்பி
யோங்கு கன்னி மாடத்தி லுறைகின் றீரென் றுரைக்கின்றார்
தாங்கற் கரிய கண்கணீர்த் தாரை யொழுகத் தரியாதே
யேங்கு சுற்றத் தொடுமிறைஞ்சிப் போனா ரெயில்சூழ் தம்பதியில். (௨௨௧)

காதல் புரிந்து தவம்புரியுங் கன்னி யாரங் கமர்கின்றார்
பூத நாதர் கோயிலினிற் காலந் தோறும் புக்கிறைஞ்சி
நீதி முறைமை வழுவாது தமக்கு நேர்ந்த பணிசெய்யச்
சீத மலர்ப்பூ மண்டபத்துத் திரைசூ ழொருபாற் சென்றிருந்து. (௨௨௨)

பண்டு கயிலைத் திருமலையிற் செய்யும் பணியின் பான்மைமணங்
கொண்ட வுணர்வு தலைசிறப்பக் குலவு மலர்மென் கொடியனையார்
வண்டு மருவுந் திருமலர்மென் மாலை காலங் களுக்கேற்ப
வண்டர் பெருமான் முடிச்சாத்த வமைத்து வணங்கி யமருநாள். (௨௨௩)

அந்தி வண்ணத் தொருவர்திரு வருளால் வந்த வாரூரர்
கந்த மாலைச் சங்கிலியார் தம்மைக் காதன் மணம்புணர
வந்த பருவ மாதலால் வகுத்த தன்மை வழுவாத
முந்தை விதியால் வந்தொருநாண் முதல்வர் கோயி லுட்புகுந்தார். (௨௨௪)

அண்டர் பெருமா னந்தணரா யாண்ட நம்பி யங்கணரைப்
பண்டை முறைமை யாற்பணிந்து பாடிப் பரவிப் புறம்போந்து
தொண்டு செய்வார் திருத்தொழில்கள் கண்டு தொழுது செல்கின்றார்
புண்ட ரீகத் தடங்கிளர்பூந் திருமண் டபத்தி னுட்புகுந்தார். (௨௨௫)

அன்பு நாரா வஞ்செழுந்து நெஞ்சு தொடுக்க வலர்தொடுத்தே
யென்புள் ளுருக்கு மடியாரைத் தொழுது நீங்கி வேறிடத்து
முன்பு போலத் திரைநீக்கி முதல்வர் சாத்துப் பணிகொடுத்து
மின்போன் மறையுஞ் சங்கிலியார் தம்மை விதியாற் கண்ணுற்றார். (௨௨௬)

கோவா முத்துஞ் சுரும்பேறுக் கொழுமென் முகையு மனையாரைச்
சேவார் கொடியார் திருத்தொண்டர் கண்ட போது சிந்தைநிறை
காவா தவர்பாற் போய்வீழத் தம்பாற் காம னார்துரந்த
பூவா ளிகள்வந் துறவீழத் தரியார் புறமே போந்துரைப்பார். (௨௨௭)

இன்ன பரிசென் றறிவரிதா லீங்கோர் மருங்கு திரைக்குள்ளாற்
பொன்னு மணியு மலர்ந்தவொளி யமுதி லளாவிப் புதியமதி
தன்னு ணீர்மை யாற்குழைத்துச சமைத்த மின்னுக் கொடிபோல்வா
ளென்னை யுள்ளந் திரிவித்தாள் யார்கொ லென்றங் கியம்புதலும். (௨௨௮)

அருகு நின்றார் விளம்புவா ரவர்தா நங்கை சங்கிலியார்
பெருகு தவத்தா லீசர்பணி பேணுங் கன்னி யாரென்ன
விருவ ராலிப் பிறவியையெம் பெருமா னருளா லெய்துவித்தார்
மருவும் பரவை யொருத்தியிவண் மற்றை யவளா மெனமருண்டார். (௨௨௯)

மின்னார் சடையார் தமக்காளாம் விதியால் வாழு மெனைவருத்தித்
தன்னா ரருளால் வரும்பேறு தவத்தா லணையா வகைதடுத்தே
யென்னா ருயிரு மெழின்மலருங் கூடப் பிணைக்கு மிவடன்னைப்
பொன்னா ரிதழி முடியார்பாற் பெறுவே னென்று போய்ப்புக்கார். (௨௩௰)

மலர்மே லயனு நெடுமாலும் வானு நிலனுங் கிளைத்தறியா
நிலவு மலருந் திருமுடியு நீடுங் கழலு முடையாரை
யுலக மெல்லாந் தாமுடையா ராயு மொற்றி யூரமர்ந்த
விலகு சோதிப் பரம்பொருளை யிறைஞ்சி முன்னின் றேத்துவார். (௨௩௧)

மங்கை யொருபான் மகிழ்ந்ததுவு மன்றி மணிநீண் முடியின்கட்
கங்கை தன்னைக் கரந்தருளுங் காதலுடையீ ரடியேனுக்
கிங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தே னுள்ளந் தொடையவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென் வருத்தந் தீருமென. (௨௩௨)

அண்ண லார்முன் பலவுமவ ரறிய வுணர்த்திப் புறத்தணைந்தே
யெண்ண மெல்லா முமக்கடிமை யாமென் றெண்ணு மென்னெஞ்சிற்
றிண்ண மெல்லா முடைவித்தாள் செய்வ தொன்று மறியேன்யான்
றண்ணி லாமின் னொளிர்பவளச் சடையீ ரருளு மெனத்தளர்வார். (௨௩௩)

மதிவாண் முடியார் மகிழ்கோயிற் புறத்தோர் மருங்கு வந்திருப்பக்
கதிரோன் மேலைக் கடல்காண மாலைக் கடலைக் கண்டயர்வார்
முதிரா முலையார் தம்மைமணம் புணர்க்க வேண்டி முளரிவளை
நிதியா னன்பர் தமக்கருளு நண்பா னினைந்து நினைந்தழிய. (௨௩௪)

உம்ப ருய்ய வுலகுய்ய வோல வேலை விடமுண்ட
தம்பி ரானார் வன்றொண்டர் தம்பா லெய்திச் சங்கிலியை
யிம்ப ருலகில் யாவருக்கு மெய்த வொண்ணா விருந்தவத்துக்
கொம்பை யுனக்குத் தருகின்றோங் கொண்ட கவலை யொழிகென்ன. (௨௩௫)

அன்று வெண்ணெய் நல்லூரில் வலியவாண்டு கொண்டருளி
யொன்று மறியா நாயேனுக் குறுதி யளித்தீ ருயிர்காக்க
வின்று மிவளை மணம்புணர்க்க வேண்டு நின்றீ ரெனப்போற்றி
மன்றன் மலர்ச்சே வடியிணைக்கீழ் வணங்கி மகிழ்ந்தார் வன்றொண்டர். (உகசு)

ஆண்டு கொண்ட வந்தணனு ரவருக் கருளிக் கருணையினு
னீண்ட கங்குல் யாமத்து நீங்கி வானி னிறைமதியந்
தீண்டு கன்னி மாடத்துச் சென்று திகழ்சங் கிலியாராந்
தூண்டு சோதி விளக்கனையார் தம்பாற் கனவிற் றோன்றினர். (உகஎ)

தோற்றும் பொழுதிற் சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமா
யாற்ற வன்பு பொங்கியெழுந் தடியே னுய்ய வெழுந்தருளும்
பேற்றுக் கென்யான் செய்வ தெனப் பெரிய கருணை பொழிந்தனைய
நீற்றுக் கோல வேதியரு நேர்நின் றருளிச் செய்கின்றார். (உகஅ)

சாருந் தவத்துச் சங்கிலிகேள் சால வென்பா லன்புடையான்
மேரு வரையின் மேம்பட்ட தவத்தான் வெண்ணெய் நல்லூரி
லியாரு மறிய யானாள வுரியா னுன்னை யுனையிரந்தான்
வார்கொண் முலையாய் நீயவனை மணத்தா லிணைவாய் மகிழ்ந்தென்றார். (உகக)

ஆதி தேவர் முன்னின்றங் கருளிச் செய்த பொழுதின்கண்
மாத ரார்சங் கிலியாரு மாலு மயனு மறிவரிய
சீத மலர்த்தா மரையடிக்கீழ்ச் சேர்ந்து வீழ்ந்து செந்நின்று
வேத முதல்வர் முன்னடுக்க மெய்தித் தொழுது விளம்புவார். (உசo)

எம்பி ரானே நீரருளிச் செய்தார்க் குரியேன் யானிமையோர்
தம்பி ரானே யருடலைமேற் கொண்டேன் றக்க விதிமணத்தா
னம்பி யாரூ ரருக்கென்னை நல்கி யருளும் பொழுதிமயக்
கொம்பி னொருங் கொண்டார்க்குக் கூறுந் திறமொன் றுளதென்பார். (உசக)

பின்னும் பின்னன் முடியார்முன் பெருக நாணித் தொழுதுரைப்பார்
மன்னுந் திருவா ரூரின்க ணவர்தா மிகவு மகிழ்ந்துறைவ
தென்னுந் தன்மை யறிந்தருளு மெம்பி ராட்டி திருமுலைதோய்
மின்னும் புரிநூன் மணிமார்பீ ரென்றார் குன்று விளக்கனையார். (உசஉ)

வேறு.

மற்றவர்தம் முரைகொண்டு வன்றொண்டர் நிலைமையினை
யொற்றிநக ரமர்ந்தபிரா னுணர்ந்தருளி யுரைசெய்வார்
பொற்றொடியா யுனையிகந்து போகாமைக் கொருசபத
மற்றமுறு நிலைமையினு லவன்செய்வா னெனவருளி. (உசங)

வேயனைய தோளியார் பானின்று மீண்டருளித்
தூயமன மகிழ்ந்திருந்த தோழனார் பாலணைந்து
நீயவளை மணம்புணரு நிலைபுரைத்தோ மதற்கவள்பா
லாயதொரு குறையுன்னு லமைப்பதுள தென்றருள. (உசச)

வன்றொண்டர் மனங்களித்து வணங்கியடி யேன்செய்ய
நின்றகுறை யாதென்ன நீயவளை மணம்புணர்தற்
கொன்றியுட னேகழ வொருசபத மவண்முன்பு
சென்றிடைத் திவ்விரவே செய்கவென வருள்செய்தார். (உசரு)

என்செய்தா லிதுமுடியு மதுசெய்வன் யானிதற்கு
மின்செய்த புரிசடையீ ரருள்பெறுதல் வேண்டுமென
முன்செய்த முறுவலுடன் முதல்வரவர் முகநோக்கி
புன்செய்கை தனக்கினியென் வேண்டுவதென் றுரைத்தருள. (உ௪௬)

வம்பணிமென் முலையவர்க்கு மனங்கொடுத்த வன்றொண்டர்
நம்பரிவர் பிறபதியும் நயந்தகோ லஞ்சென்று
கும்பிடவே கடவேனுக் கிதுவிலக்கா மெனக்குறிப்பாற்
றம்பெருமான் றிருமுன்பு தாம்வேண்டுங் குறையிரப்பார். (உ௪௭)

சங்கரர்தாள் பணிந்திரந்து தமிழ்வேந்தர் மொழிகின்றார்
மங்கையவ டனைப்பிரியா வகைசபதஞ் செய்வதனுக்
கங்கவளோ டியான்வந்தா லப்பொழுது கோயில்விடத்
தங்குமிடந் திருமகிழ்க்கீழ்க் கொளவேண்டு மெனத்தாழ்ந்தார். (உ௪௮)

தம்பிரான் றோழரவர் தாம்வேண்டிக் கொண்டருள
வும்பர்நா யகருமதற் குடன்பாடு செய்வாராய்
நம்பிநீ சொன்னபடி நாஞ்செய்து மென்றருள
வெம்பிரா னேயரிய தினியெனக்கென் னெனவேத்தி. (உ௪௯)

அஞ்சலிசென் னியின்மன்ன வருள்பெற்றுப் புறம்போதச்
செஞ்சடையா ரவர்மாட்டுத் திருவிளையாட் டினைமகிழ்ந்தோ
வஞ்சியிடைச் சங்கிலியார் வழியடிமைப் பெருமையோ
துஞ்சிருண்மீ ளவுமணைந்தா ரவர்க்குறுதி சொல்லுவார். (உ௫௦)

சங்கிலியார் தம்மருங்கு முன்புபோற் சார்ந்தருளி
நங்கையுனக் காரூர னயந்துசூ ளுறக்கடவ
னங்குநமக் கெதிர்செய்யு மதற்குநீ யிசையாதே
கொங்கலர்பூ மகிழின்கீழ்க் கொள்கவெனக் குறித்தருள. (உ௫௧)

மற்றவருங் கைகுவித்து மாலயனுக் கறிவரியீ
ரற்றமெனக் கருள்புரிந்த வதனிலடி யேனுகப்
பெற்றறியா னெனக்கண்கள் பெருந்தாரை பொழிந்திழிய
வெற்றிமழ விடையார்தஞ் சேவடிக்கீழ் வீழ்ந்தெழுந்தார். (உ௫௨)

தையலார் தமக்கருளிச் சடாமகுட ரெழுந்தருள
வெய்தியபோ ததிசயத்தா லுணர்ந்தெழுந்தவ் விரவின்கட்
செய்யசடை யாரருளின் றிறநினைந்தே கண்டுயிலா
ரையமுட னருகுதுயில் சேடியரை யணைந்தெழுப்பி. (உ௫௩)

நீங்குதுயிற் றாங்கியற்கு நீங்கலெழுந் தறியுமவர்
தாங்கனவி லெழுந்தருளித் தமக்கருளிச் செய்ததெலாம்
பாங்கறிய மொழியவவர் பயத்தினுட னதிசயமுந்
தாங்குமகிழ்ச் சியுமெய்தச் சங்கிலியார் தமைப்பணிந்தார். (உ௫௪)

சேயிழையார் திருப்பள்ளி யெழுச்சிக்கு மலர்தொடுக்குந்
தூயபணிப் பொழுதாகத் தொழில்புரிவா ருடன்போதக்
கோயிலின்முன் காலமது வாகவே குறித்தணைந்தா
ராயசப தஞ்செய்ய வரவுபார்த் தாரூரர். (உ௫௫)

நின்றவரங் கெதிர்வந்த நேரிழையார் தம்மருங்கு
சென்றணைந்து தம்பெருமான் றிருவருளின் றிறங்கூற
மின்றயங்கு நுண்ணிடையார் விதிர்ப்புடன்பட் டெதிர்விளம்பா
ரொன்றியநா ளுமைமடவா ருடனெழுதுங்கி யுட்புகுந்தார். (உ௫க)

அங்கவர்தம் பின்சென்ற வாரூர ராயிழையீ
ரிங்குநான் பிரியாமை யுமக்கிசையும் படியியம்பத்
திங்கண்முடி யார்திருமுன் போதுவீ ரெனச்செப்பச்
சங்கிலியார் கனவுரைப்பக் கேட்டதா தியர்மொழிவார். (உ௫௰)

எம்பெருமா னிதற்காக வெழுந்தருளி யிமையவர்க
டம்பெருமான் றிருமுன்பு சாற்றுவது தகாதென்ன
நம்பெருமான் வன்றொண்டர் நாதர்செய லறியாதே
கொம்பனையீர் யான்செய்வ தெங்கென்று கூறுதலும். (உ௫அ)

மாதரவர் மகிழ்க்கீழே யமையுமென மனமருள்வா
ரீதலரா திவுமாகு மீவர்சொன்ன படிமறுக்கி
லாதலினா லுடன்படவே யமையுமெனத் துணிந்தாகிற்
போதுவீ ரெனமகிழ்க்கீ ழவர்போதப் போயணைந்தார். (உ௫க)

தாவாத பெருந்தவத்துச் சங்கிலியா ருங்காண
மூவாத திருமகிழை முக்காலும் வலம்வந்து
மேவாதிங் கியானகலே னெனநின்று விளம்பினார்
பூவார்தண் புனற்பொய்கை முனைப்பாடிப் புரவலனார். (உ௬0)

மேவியசீ ராரூரர் மெய்ச்சபத வினைமுடிப்பக்
காவியினேர் கண்ணாருங் கண்டுமிக மனங்கலங்கிப்
பாவியே னிதுகண்டேன் றம்பிரான் பணியாலென்
றாவிசோர்ந் தழிவாரங் கொருமருங்கு மறைந்தயர்ந்தார். (உ௬க)

திருநாவ லூராளி தம்முடைய செயன்முற்றிப்
பொருநாகத் துரிபுனைந்தார் கோயிலினுட் புகுந்திறைஞ்சி
யருளானந் தரவிருந்திர் செய்தவா றுங்கிடெனப்
பெருநாம மெடுத்தேத்திப் பெருமகிழ்ச்சி யுடன்போந்தார். (உ௬உ)

வார்புனையும் வனமுலையார் வன்றொண்டர் போனதற்பின்
றார்புனையும் மண்டபத்துத் தம்முடைய பணிசெய்து
கார்புனையு மணிகண்டர் செயல்கருத்திற் கொண்டிறைஞ்சி
யேர்புனையுங் கன்னிமா டம்புகுந்தா ரிருள்புலர. (உ௬௩)

அன்றிரவே யாதிபுரி யொற்றிகொண்டா ராட்கொண்ட
பொன்றிகழ்பூண் வன்றொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திருவொற்றி யூர்நிலவு தொண்டருக்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள வுணர்த்துவார். (உ௬௪)

நம்பியா ரூரனுக்கு நங்கைசங் கிலிதன்னை
யிம்பர்ஞா லத்திடைநம் மேவலினான் மணவினைசெய்
தும்பர்வா ழுலகறிய வளிப்பீரென் றுணர்த்துதலுந்
தம்பிரான் றிருத்தொண்ட ரனைவருமேற் கொண்டெழுவார். (உ௬௫

மண்ணிறைந்த பெருஞ்செல்வத் திருவொற்றி யூர்மன்னு
மெண்ணிறைந்த திருத்தொண்ட ரெழிற்பதியோ ருடனீண்டி
புண்ணிறைந்த மகிழ்ச்சியுட னும்பர்பூ மழைபொழியக்
கண்ணிறைந்த பெருஞ்சிறப்பிற் கலியாணஞ் செய்தளித்தார். (உ௬௬)

பண்டுநிகழ் பான்மையினாற் பசுபதிதன் னருளாலே
வண்டமர்பூங் குழலாரை மணம்புணர்ந்த வன்றொண்டர்
புண்டரிகத் தவள்வனப்பைப் புறங்கண்ட நலத்தைக்
கண்டுகேட் டுண்டுயிர்த்துற் றமர்ந்திருந்தார் காதலினால். (உ௬௭)

யாழின்மொழி யெழின்முறுவ லிருகுழைமேற் கடைபிறழு
மாழைவிழி வனமுலையார் மணியல்குற் றுறைபடிந்து
வீழுமவர்க் கிடைதோன்றி யிரும்புலவி புணர்ச்சிக்க
ணூழியா மொருகணந்தா னவ்வூழி யொருகணமாம். (உ௬௮)

இந்நிலையிற் பேரின்ப மினிதமர்வா ரிறையுறையு
மன்னுபுக ழொற்றியூ ரதனின்மகிழ் சிறப்பினாற்
சென்னிமதி புனைவார்தந் திருப்பாதந் தொழுதிருந்தார்
முன்னியகா லங்கள்பல முறைமையினால் வந்தகல. (உ௬௯)

பொங்குதமிழ்ப் பொதியமலைப் பிறந்துபூஞ் சந்தனத்தின்
கொங்கணைந்து குளிர்சார லிடைவளர்ந்த கொழுந்தென்ற
லங்கணையத் திருவாரூ ரணிவீதி யழகரவர்
மங்கலநாள் வசந்தமெதிர் கொண்டருளும் வகைநினைந்தார். (உ௭௦)

வெண்மதியின் கொழுந்தணிந்த வீதிவிடங் கப்பெருமா
னெண்ணுதலார் புடைபரந்த வோலக்க மதனிடையே
பண்ணமரு மொழிப்பரவை யார்பாட லாடறனைக்
கண்ணுறமுன் கண்டுகேட் டார்போலக் கருதினார். (உ௭௧)

பூங்கோயி லமர்ந்தாரைப் புற்றிடங்கொண் டிருந்தாரை
நீங்காத காதலினா னினைந்தாரை நினைவாரைப்
பாங்காகத் தாமுன்பு பணியவரும் பயனுணர்வா
ரீங்குநான் மறந்தேனென் றேசறவான் மிகவழிவார். (உ௭௨)

பின்னொளிர்செஞ் சடையானை வேதமுத லானானை
மன்னுபுகழ்த் திருவாரூர் மகிழ்ந்தானை மிகநினைந்து
பன்னியசொற் பத்திமையு மடிமையையுங் கைவிடுவா
னென்னுமிசைத் திருப்பதிக மெடுத்தியம்பி யிரங்கினார். (உ௭௩)

பின்னொருநா டிருவாரூர் தனைப்பெருக நினைந்தருளி
புன்னவினி யார்கோயில் புகுந்திறைஞ்சி யொற்றிநகர்
தன்னையக லப்புக்கார் தாஞ்செய்த சபதத்தான்
முன்னடிக டோன்றாது கண்மறைய மூர்ச்சித்தார். (உ௭௪)

செய்வதனை யறியாது திகைத்தருளி நெடிதுயிர்ப்பார்
மைவிரவு கண்ணார்பாற் சூளுறவு மறுத்ததனு
லிவ்வினைவந் தெய்தியதா மெனநினைந்தெம் பெருமானை
வெவ்வியவித் துயர்நீங்கப் பாடுவே னெனநினைந்து. (உ௭௫)

வேறு.

அழுக்கு மெய்கொடென் றெடுத்தசொற் பதிக மாகி நீள்புரி யண்ணலை யோதி
வழுத்து நெஞ்சொடு தாழ்ந்துநின் றுரைப்பார் மாதொர் பாகனார் மலர்ப்பத முன்னி
யிழுக்கு நீக்கிட வேண்டுமென் றிரந்தே யெய்து வெந்துயர்க் கையற வினுக்கும்
பழிக்கும் வெள்கிநல் லிசைகொடு பரவிப் பணிந்து சாலவும் பலபல நினைவார். (உஎசு)

அங்கு நாதர்செய் யருளது வாக வங்கை கூப்பி யாரூர்தொழ நினைந்தே
பொங்கு காதன்மீ ளாவிலை மையினாற் போது வார்வழி காட்டமுன் போந்து
திங்கள் வேணியார் திருமுல்லை வாயில் சென்றி றைஞ்சிநீ டியதிருப் பதிகஞ்
சங்கிலிக் காகவென் கண்களை மறைத்தீ ரென்று சாற்றிய தன்மையிற் பாடி. (உஎஎ)

தொண்டை மானுக்கன் றருள்கொடுத் தருளுந் தொல்லை வண்புகழ் முல்லை நாயகரைக்
கொண்ட வெந்துயர் களைகெனப் பரவிக் குறித்த காதலி னெறிக்கொள வருவார்
வண்டுலா மலர்ச் சோலைகள் சூழ்ந்து மாட மாளிகை நீடுவெண் பாக்கங்
கண்ட தொண்டர்க ளெதிர்கொள வணைந்து காயு நாகத்தர் கோயிலை யடைந்தார். ()

அணைந்த தொண்டர்க ளுடன்வல மாக வங்க ணாயகர் கோயின்முன் னெய்திக்
குணங்க ளேத்தியே பரவியஞ் சலியாற் குவித்த கைதலை மேற்கொண்டு நின்று
வணங்கி நீர்மகிழ் கோயிலு ளீரே யென்ற வன்றொண்டர்க் கூன்றுகோ லருளி
யிணங்கி லாமொழி யாலுளேம் போகீ ரென்றி யம்பினா ரேதிலார் போல. (உஎகூ)

வேறு.

பிழையுளன பொறுத்திடுவ ரென்றெடுத்துப் பெண்பாகம்
விழைவடிவிற் பெருமானை வெண்பாக்க மகிழ்ந்தானை
யிழையெனமா சுணமணிந்த விறையானைப் பாடினார்
மழைதவழு நெடும்புரிசை நாவலூர் மன்னவனார். (உஅ0)

முன்னின்று முறைப்பாடு போன்மொழிந்த மொழிமாலைப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடியபின் பற்றாய
வென்னுடைய பிரானருளிங் கித்தனைகொ லாமென்று
மன்னுபெருந் தொண்டருடன் வணங்கியே வழிக்கொள்வார். (உஅக)

அங்கணர்தம் பதியதனை யகன்றுபோ யன்பருடன்
பங்கயப்பூந் தடம்பணைசூழ் பழையனூ ருழையெய்தித்
தங்குவா ரம்மைதிருத் தலையாலே வலங்கொள்ளுந்
திங்கண்முடி யாராடுந் திருவாலங் காட்டினயல். (உஅஉ)

முன்னின்று தொழுதேத்தி முத்தாவென் றெடுத்தருளிப்
பன்னுமிசைத் திருப்பதிகம் பாடிமகிழ்ந் தேத்துவா
ரங்கின்று வணங்கிப்போய்த் திருவூற லமர்ந்திறைஞ்சிக்
கன்னிமதின் மணிமாடக் காஞ்சிமா நகரணைந்தார். (உஅ௩

தேனிலவு பொழிற்கச்சித் திருக்காமக் கோட்டத்தி
லூனில்வள ருயிர்க்கெல்லா மொழியாத கருணையினா
லானதிரு வறம்புரக்கு மம்மைதிருக் கோயிலின்முன்
வானில்வளர் திருவாயில் வணங்கினார் வன்றொண்டர். (உஅ

தொழுதுவிழுந் தெழுந்தருளாற் றுதித்துட்போய்த் தொல்லுலகம்
முழுதுமளித் தழித்தாக்கு முதல்வர்திரு வேகம்பம்
பழுதிலடி யார்முன்பு புகப்புக்குப் பணிகின்றா
ரிழுதையேன் றிருமுன்பே யென்மொழிவே னென்றிறைஞ்சி. (உஅ

விண்ணார்வா ரமுதுண்ண மிக்கபெரு விடமுண்ட
கண்ணாளா கச்சியே கம்பனே கடையானே
னெண்ணாத பிழைபொறுத்திங் கியான்காண வெழிற்பவள
வண்ணாகண் ணளித்தருளா யெனவீழ்ந்து வணங்கினார். (உ௮௬)

பங்கயச்செங் கைத்தளிராற் பனிமலர்கொண் டருச்சித்துச்
செங்கயற்கண் மலைவல்லி பணிந்தசே வடிநினைந்து
பொங்கியவன் பொடுபரவிப் போற்றியவா ரூரருக்கு
மங்கைதழு வக்குழைந்தார் மறைந்தவிடக் கண்கொடுத்தார். (உ௮எ)

ஞாலந்தா னிடந்தவனு நளிர்விசும்பு கடந்தவனு
மூலந்தா னறிவரியார் கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலந்தான் காட்டுதலுங் குறுகிவிழுந் தெழுந்துகளித்
தாலந்தா னுகந்தவனென் றெடுத்தாடிப் பாடினார். (உ௮௮)

பாடிமிகப் பரவசமாய்ப் பணிவார்க்குப் பாவையுட
னீடியகோ லங்காட்ட நிறைந்தவிருப் புடனிறைஞ்சிச்
சூடியவஞ் சலியினராய்த் தொழுதுபுறம் போந்தன்பு
கூடியமெய்த் தொண்டருடன் கும்பிட்டங் கினிதமர்வார். (உ௮௯)

மாமலையாண் முலைச்சுவடும் வளைத்தழும்பு மணிந்தமதிப்
பூமலிவார் சடையாரைப் போற்றியரு ளதுவாகத்
தேமலர்வார் பொழிற்காஞ்சித் திருநகரங் கடந்தகல்வார்
பாமலர்மா லைப்பதிகந் திருவாரூர் மேற்பரவி. (உ௯0)

அந்திபுரண் பகலுமென வெடுத்தார்வத் துடனசைவா
லெந்தைபிரான் றிருவாரூ ரென்றுகொலெய் துவதென்று
சந்தவிசை பாடிப்போய்த் தாங்கரிய வாதரவு
வந்தணைய வன்பருடன் மகிழ்ந்துவழிக் கொள்கின்றார். (உ௯௧)

மன்னுதிருப் பதிகடொறும் வன்னியொடு கூவிளமுஞ்
சென்னிமிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தா
ரன்னமலி வயற்றடங்கள் சூழ்ந்ததிரு வாமாத்தூர். (உ௯௨)

அங்கணரை யாமாத்தூ ரழகர்தமை யடிவணங்கித்
தங்குமிசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்
செங்கண்வள வன்பிறந்த சீர்நாடு நீர்நாடு. (உ௯௩)

அந்நாட்டின் மருங்குதிரு வரத்துறையைச் சென்றெய்தி
மின்னாரும் படைமழுவார் விரைமலர்த்தாள் பணிந்தெழுந்து
சொன்மாலை மலர்கல்வா யகிலென்னுந் தொடைசாத்தி
மன்னார்வத் திருத்தொண்ட ருடன்மகிழ்ந்து வைகினார். (உ௯௪)

பரமர்திரு வரத்துறையைப் பணிந்துபோய்ப் பலபதிகள்
விரவிமழ விடையுயர்த்தார் விரைமலர்த்தா டொழுதேத்தி
புரவுநீர்த் தடம்பொன்னி யடைந்தன்ப ருடனாடி
யரவணிந்தா ரமர்ந்ததிரு வாவடுதண் டுறையணைந்தார். (உ௯௫)

அங்கணைவார் தமையடியா ரெதிர்கொள்ளப் புக்கருளிப்
பொங்குதிருக் கோயிலினைப் புடைவலங்கொண் டுள்ளணைந்து
கங்கைவாழ் சடையாயோர் கண்ணிலே னெனக்கவல்வா
ரிங்கெனக்கா ருறவென்னுந் திருப்பதிக மெடுத்திசைத்தார். (௨௯௬)

திருப்பதிகங் கொடுபரவிப் பணிந்துதிரு வருளாற்போய்
விருப்பினொடுந் திருத்துருத்தி தனைமேவி விமலர்கழ
லருத்தியினாற் புக்கிறைஞ்சி யடியேன்மே லுற்றபிணி
வருத்தமெனை யொழித்தருள வேண்டுமென வணங்குவார். (௨௯௭)

பரவியே பணிந்தவர்க்குப் பரமர்திரு வருள்புரிவார்
விரவியவிப் பிணியடையத் தவிர்ப்பதற்கு வேறாக
வரமலர்வண் டறைதீர்த்த வடகுளத்துக் குளியென்னக்
கரவிறுத் தொண்டர்தாங் கைதொழுது புறப்பட்டார். (௨௯௮)

மிக்கபுனற் றீர்த்தத்தின் முன்னணைந்து வேதமெலாந்
தொக்கவடி வாயிருந்த துருத்தியார் தமைத்தொழுது
புக்கதனின் மூழ்குதலும் புதியபிணி யதுநீங்கி
யக்கணமே மணியொளிசேர் திருமேனி யாயினார். (௨௯௯)

கண்டவர்க ளதிசயிப்பக் கரையேறி யுடைபுனைந்து
மண்டுபெருங் காதலினாற் கோயிலினை வந்தடைந்து
தொண்டரெதிர் மின்னுமா மேகமெனுஞ் சொற்பதிக
மெண்டிசையு மறிந்துய்ய வெழிசையா லெடுத்திசைத்தார். (௩௦௦)

பண்ணிறைந்த தமிழ்பாடிப் பரமர்திரு வருண்மறவா
தெண்ணிறைந்த தொண்டருடன் பணிந்தங்க ணுறைந்தேகி
யுண்ணிறைந்த பதிபிறவு முடையவர்தாள் வணங்கிப்போய்க்
கண்ணிறைந்த திருவாரூர் முன்றோன்றக் காண்கின்றார். (௩௦௧)

அன்றுதிரு நோக்கொன்றா லாரக்கண் டின்புறார்
சென்றுசில மிசைவீழ்ந்து நெடிதுயிர்த்து நேரிறைஞ்சி
வன்றொண்டர் திருவாரூர் மயங்குமா லையிற்புகுந்து
துன்றுசடைத் தூவாயர் தமைமுன்னந் தொழவணைந்தார். (௩௦௨)

பொங்குதிருத் தொண்டருட னுள்ளணைந்து புக்கிறைஞ்சித்
துங்கவிசைத் திருப்பதிகம் தூவாயா வென்றெடுத்தே
யிங்கெமது துயர்களைந்து கண்காணக் காட்டாயென்
றங்கணர்த முன்னின்று பாடியருந் தமிழ்புனைந்தார். (௩௦௩)

ஆறணியுஞ் சடையாரைத் தொழுதுபுறம் போந்தங்கண்
வேறிருந்து திருத்தொண்டர் விரவுவா ருடன்கூடி
யேறுயர்த்தார் திருமூலட் டானத்து ளிடைதெரிந்து
மாறிறிரு வத்தயா மத்திறைஞ்ச வந்தணைந்தார். (௩௦௪)

ஆதிதிரு வன்பரெதி ரணையவவர் முகநோக்கிக்
கோதிலிசை யாற்குருகு பாயவெனக் கோத்தெடுத்தே
யேதிலார் போல்வினவி யேசறவாற் றிருப்பதிகங்
காதல்புரி கைக்கிளையாற் பாடியே கலந்தணைவார். (௩௦௫)

சீர்பெருகுந் திருத்தேவா சிரியன்முன் சென்றிறைஞ்சிக்
கார்விரவு கோபுரத்தைக் கைதொழுதே யுட்புகுந்து
தார்பெருகு பூங்கோயி றனைவணங்கிச் சார்ந்தணைவா
ரார்வமிகு பெருங்காத லாலவனி மேல்வீழ்ந்தார். (௧0௬)

வீழ்ந்தெழுந்து கைதொழுது முன்னின்று விம்மியே
வாழ்ந்தமலர்க் கண்ணொன்றா லாராமன் மனமழிவா
ராழ்ந்ததுயர்க் கடலிடைநின் றடியேனை யெடுத்தருளித்
தாழ்ந்தகருத் தினைநிரப்பிக் கண்டாரு மெனத்தாழ்ந்தார். (௧0௭)

திருநாவ லூர்மன்னர் திருவாரூர் வீற்றிருந்த
பெருமானைத் திருமூலட் டானஞ்சேர் பிஞ்சகனைப்
பருகாவின் னமுதத்தைக் கண்களாற் பருகுதற்கு
மருவார்வத் துடன்மற்றைக் கண்டார் ரெனவணங்கி. (௧0௮)

வேறு.

மீளா வடிமை யெனவெடுத்து மிக்கதேவர் குலமெல்லா
மாளா மேநஞ் சுண்டருளி மன்னி யிருந்த பெருமானைத்
தாளா தரிக்கு மெய்யடியார் தமக்கா மிடர்நீர் தரியீரென்
றாளாந் திருத்தோ ழமைத்திறத்தா லஞ்சொற் பதிகம் பாடினார். (௧0௯)

பூத முதல்வர் புற்றிடங்கொண் டிருந்த புனிதர் வன்றொண்டர்
காதல் புரிவே தனைக்கிரங்கிக் கருணைத் திருநோக் களித்தருளிச்
சீத மலர்க்கண் கொடுத்தருளச் செவ்வே விழித்து முகமலர்ந்து
பாத மலர்கண் மேற்பணிந்து வீழ்ந்தா ருள்ளம் பரவசமாய். (௧௧0)

விழுந்து மெழுந்தும் பலமுறையான் மேவிப் பணிந்து மிகப்பரவி
யெழுந்த களிப்பி னாலாடிப் பாடி யின்ப வெள்ளத்தி
லழுந்தி யிரண்டு கண்ணாலு மம்பொற் புற்றி னிடையெழுந்த
செழுந்தண் பவளச் சிவக்கொழுந்தி னருளைப் பருகித் திளைக்கின்றார். (௧௧௧)

கால நிரம்பத் தொழுதேத்திக் கனக மணிமா ளிகைக்கோயின்
ஞால முய்ய வருநம்பி நலங்கொள் விருப்பால் வலங்கொண்டு
மாலு மயனு முறையிருக்கும் வாயில் கழியப் புறம்போந்து
சீல முடைய வன்பருடன் றேவா சிரியன் மருங்கணைந்தார். (௧௧௨)

நங்கை பரவை யார்தம்மை நம்பி பிரிந்து போனதற்பின்
றங்கு மணிமா ளிகையின்கட் டனிமை கூரத் தளர்வார்க்குக்
கங்குல் பகலாய்ப் பகல்கங்கு லாகிக் கழிய நாளெல்லாம்
பொங்கு காதன் மீதூரப் புலர்வார் சிலநாள் போனதற்பின். (௧௧௩)

செம்மை நெறிசேர் திருநாவ லூர ரொற்றி யூர்சேர்ந்து
கொம்மை முலையார் சங்கிலியார் தம்மை குலவு மணம்புணர்ந்த
மெய்ம்மை வார்த்தை தாமவர்பால் விட்டார் வந்து கட்டுரைப்பத்
தம்மை யறியா வெகுளியினாற் றரியா நெஞ்சி னொடுந்தளர்வார். (௧௧௪)

மென்பூஞ் சயனத் திடைத்துயிலு மேவார் விழித்து மினிதமரார்
பொன்பூந் தவிசின் மிசையினிரார் நில்லார் செல்லார் புறம்பொழியார்
மன்பூ வாளி மழைகழியார் மறவார் நினையா ரென்செய்வா
ரென்பூ டுருக்கும் புலவியோ பிரிவோ விரண்டி னிடைப்பட்டார். (௧௧௫)

ஆன கவலைக் கையறவா லழியு நாளி லாரூரர்
கூன லிளவெண் பிறைக்கண்ணி முடியார் கோயின் முன்குறுகப்
பானல் விழியார் மாளிகையிற் பண்டு செல்லும் பரிசினாற்
போன பெருமைப் பரிசனங்கள் புகுதப் பெறாது புறநின்றார். (௱௧௬)

நின்ற நிலைமை யவர்கள்சிலர் நிலவு திருவா ரூரரெதிர்
சென்று மொழிவார் திருவொற்றி யூரி னிகழ்ந்த செய்கையெலா
மொன்று மொழியா வகையறிந்தங் குள்ளார் தள்ள மாளிகையி
னின்று புறமுஞ் சென்றெய்தப் பெற்றி லோமென் றிறைஞ்சினார். (௱௧௭)

மற்ற மாற்றங் கேட்டழிந்த மனத்த ராகி வன்றொண்ட
ருற்றவிதனுக் கினியென்னோ செயலென் றுணர்வா ருலகியல்பு
கற்ற மாந்தர் சிலர்தம்மைக் காதற் பரவை யார்கொண்ட
செற்ற நிலைமை யறிந்ததற்குத் தீர்வு சொல்லச் செலவிட்டார். (௱௧௮)

நம்பி யருளாற் சென்றவரு நங்கை பரவை யார்தமது
பைம்பொன் மணிமா ளிகையணைந்து பண்பு புரியும் பாங்கினால்
வெம்பு புலவிக் கடலழுந்து மின்னே ரிடையாண் முன்னெய்தி
யெம்பி ராட்டிக் கிதுதகுமோ வென்று பலவு மெடுத்துரைத்தார். (௱௧௯)

பேத நிலைமை நீதியினாற் பின்னும் பலவுஞ் சொன்னவர்முன்
மாத ரவரு மறுத்துமனங் கொண்ட செற்ற மாற்றாரா
யேத மருவு மவர்திறத்தி லிந்த மாற்ற மியம்பிலுயிர்
போத லொழியா தெனவுரைத்தா ரவரு மஞ்சிப் புறம்போந்தார். (௱௨0)

போந்து புகுந்த படியெல்லாம் பூந்தண் பழன முனைப்பாடி
வேந்தர் தமக்கு விளம்புதலும் வெருவுற் றயர்வார் துயர்வேலை
நீந்தும் புணையார் துணைகாணார் நிகழ்ந்த சிந்தா குலநெஞ்சிற்
காந்த வழிந்து தோய்ந்தெழார் கங்கு லிடையா மக்கடலுள். (௱௨௧)

அருகு சூழ்ந்தார் துயின்றுதிரு வத்த யாமம் பணிமடங்கிப்
பெருகு புவனஞ் சலிப்பின்றிப் பேயு முறங்கும் பிறங்கிருள்வாய்
முருகு விரியு மலர்க்கொன்றை முடிமே லரவு மிளமதியுஞ்
செருகு மொருவர் தோழர்தனி வருந்தி யிருந்து சிந்திப்பார். (௱௨௨)

முன்னை வினையா லிவ்வினைக்கு மூல மானான் பாலணைய
வென்னை புடையாய் நினைந்தருளா யிந்த யாமத் தெழுந்தருளி
யன்ன மனையாள் புலவியினை யகற்றி லுய்ய லாமன்றிப்
பின்னை யில்லைச் செயலென்று பெருமா னடிக டமைநினைந்தார். (௱௨௩)

அடியா ரிடுக்கண் டரியாதா ராண்டு கொண்ட தோழர்குறை
முடியா திருக்க வல்லரோ முற்று மளித்தாள் பொற்றளிர்க்கைத்
தொடியார் தழும்பு முலைச்சுவடு முடையார் தொண்டர் தாங்காணும்
படியா லணைந்தார் நெடியோனுங் காணா வடிகள் படிதோய. (௱௨௪)

தம்பி ரானா ரெழுந்தருளத் தாங்கற் கரிய மகிழ்ச்சியினாற்
நம்பி யாரின் றவயவங்கள் கலந்த புளக மயிர்முகிழ்ப்ப
நம்பி யாரூ ரருமெதிரே நளின மலர்க்கை தலைகுவிய
வம்பி காவல் லவர்செய்ய வடித்தா மரையின் கீழ்வீழ்ந்தார். (௱௨௫)

விழுந்து பரவி மிக்கபெரு விருப்பி னோடு மெதிர்போற்றி
யெழுந்த நண்பர் தமைநோக்கி யென்னீ யுற்ற தென்றருளத்
தொழுந்தங் குறையை விளம்புவார் யானே தொடங்குந் தூரிசிடைப்பட்
டழுந்து மென்னை யின்னமெடுத் தாளவேண்டு முமக் கென்று. (௩௨௬)

அடியே னங்குத் திருவொற்றி யூரி னீரே யருள்செய்ய
வடிவே லொண்கட் சங்கிலியை மணஞ்செய் தணைந்த திறமெல்லாங்
கொடியே ரிடையாள் பரவைதா னறிந்து தன்பால் யான்குறுகின்
முடிவே னென்று துணிந்திருந்தா ளின்றுஞ் செய்வ தெனமொழிந்து. (௩௨௭)

நாய னீரே நானுமக்கிங் கடியே னாகி னீரெனக்குத்
தாயி னல்ல தோழருமாந் தம்பி ரானா ரேயாகி
லாய வறிவு மிழந்தழிவே னயர்வு நோக்கி யவ்வளவும்
போயிவ் விரவே பரவையுறு புலவி தீர்த்துத் தாருமென. (௩௨௮)

அன்பு வேண்டுந் தம்பெருமா னடியார் வேண்டிற் றேவேண்டி
முன்பு நின்று விண்ணப்பஞ் செய்த நம்பி முகநோக்கித்
துன்ப மொழிநீ யாமுனக்கோர் தூத னாகி யிப்பொழுதே
பொன்செய் மணிப்பூண் பரவைபாற் போகின்றோமென் றருள்செய்தார். (௩௨௯)

எல்லை யில்லாக் களிப்பினா லிறைவர் தாளில் வீழ்ந்தெழுந்து
வல்ல பரிசெல் லாந்துதித்து வாழ்ந்து நின்ற வன்றொண்டர்
முல்லை முகைவெண் ணகைப்பவரை முகில்சேர் மாடத் திடைச்செல்ல
மில்லா நீண்ட வெழுந்தருளி நீக்கும் புலவி யெனத்தொழுதார். (௩௩0)

அண்டர் வாழக் கருணையினா லால கால மமுதாக
வுண்ட நீலக் கோலமிடற் றொருவ ரிருவர்க் கறிவரியார்
வண்டு வாழு மலர்க்கூந்தற் பரவை யார்மா ளிகைநோக்கித்
தொண்ட னார்தந் துயர்நீக்கத் தூத னாரா யெழுந்தருள. (௩௩௧)

தேவா சிரியன் முறையிருக்குந் தேவரெல்லாஞ் சேவித்துப்
போவார் தம்மில் வேண்டுவார் போத வொழிந்தார் புறத்தொழிய
மேவா வணுக்கச் சேவகத்தி லுள்ளோர் பூத கணநாதர்
மூவா முனிவர் யோகிகளின் முதலா னார்கண் முன்போக. (௩௩௨)

அருகு பெரிய தேவருட னணைந்து வருமவ் விருடிகளு
மருவு நண்பி னிதிக்கோனு முதலா யுள்ளோர் மகிழ்ந்தேத்தத்
தெருவும் விசும்பு நிறைந்துவிரைச் செழும்பூ மாரி பொழிந்தலையப்
பொருவி லன்பர் விடுந்தூதர் புனித வீதி யினிற்போத. (௩௩௩)

மாலு மயனுங் காணாதார் மலர்த்தாள் பூண்டு வந்திறைஞ்சுங்
கால மிதுவென் றங்கவரை யழைத்தா லென்னக் கடல்விளைத்த
வால மிருண்ட கண்டத்தா னடித்தா மரைமேற் சிலம்பொலிப்ப
நீல மலர்க்கட் பரவையார் திருமா ளிகையை நேர்நோக்கி. (௩௩௪)

இறைவர் விரைவி னெழுந்தருள வெய்து மவர்கள் பின்றொடர
வறைகொ டிரைநீர் தொடர்சடையி லரவு தொடர வரியவிளம்
பிறைகொ ளருகு நறையிதழிப் பிணையல் சுரும்பு தொடரவுடன்
மறைக டொடர வன்றொண்டர் மனமுந் தொடர வரும்பொழுது. (௩௩௫)

பெருவீ ரையினு மிகமுழங்கிப் பிறங்கு மதகுஞ் சரமுரித்து
மருவீ ருரிவை புனைந்தவர்தம் மருங்கு சூழ்வார் நெருங்குதலாற்
றிருவீ தியிஎளி லழகரவர் மகிழுஞ் செல்வத் திருவாரு
ரொருவீ தியிலே சிவலோக முழுதுங் காண வுளதாமால். (கூகூசு)

ஞால முய்ய வெழுந்தருளு நம்பி தூதர் பரவையார்
கோல மணிமா ளிகைவாயில் குறுகு வார்முன் கூடத்தம்
பாலங் கணைந்தார் புறநிற்பப் பண்டே தம்மை யர்ச்சிக்குஞ்
சீல முடைய மறைமுனிவ ராகித் தனியே சென்றணைந்தார். (கூகூஎ)

சென்று மணிவாயிற் கதவஞ் செறிய வடைத்த வதன்முன்பு
நின்று பரவாய் திறவாயென் றழைப்ப நெறிமென் குழலாரு
மொன்றுந் துயிலா துணர்ந்தயர்வா ருடைய பெருமான் பூசனைசெய்
தன்றும் புரிநூன் மணிமார்பர் போலு மழைத்தா ரெனத்துணிந்து. (கூகூஅ)

பாதி மதிவாழ் முடியாரைப் பயில்பூ சனையின் பணிபுரிவார்
பாதி யிரவி லிங்கணைந்த தென்னோ வென்று பயமெய்திப்
பாதி யுமையா டிருவடிவிற் பரம ராவ தறியாதே
பாதி மதிவா ணுதலாரும் பதைத்து வந்து கடைதிறந்தார். (கூகூகூ)

மன்னு முரிமை வன்றொண்டர் வாயிற் றூதா வாயிலிடை
முன்னின் றாரைக் கண்டிறைஞ்சி முழுது முறங்கும் பொழுதின்க
ணென்னை யாளும் பெருமானிங் கெய்தி யருளா றென்ன
பின்னு மணிநூ லணிமார்பீ ரெய்த வேண்டிற் றென்னென்றார். (கூசுO)

வேறு.

கங்கைநீர் கரந்தவேணி கரந்தவ ரருளிச் செய்வார்
நங்கைநீ மறுது செய்யி னுன்வந்த துரைப்ப தென்ன
வங்கயல் விழியி னாரு மதனைநீ ரருளிச் செய்தா
லிங்கெனக் கிசைய மாகி லிசையலா மென்று சொல்லி. (கூசுக)

என்னினைந் தணைந்த தென்பா லின்னதென் றருளிச் செய்தாற்
பின்னைய தியலு மாகி லாமெனப் பிரானார் தாமு
மின்னிடை மடவாய் நம்பி வரவிங்கு வேண்டு மென்ன
நன்னுத லாருஞ் சால நன்றுநம் பெருமை யென்பார். (கூசுஉ)

பங்குனித் திருநா ளுக்குப் பண்டுபோல் வருவா ராக
விங்கெனைப் பிரிந்து போகி யொற்றியூ ரெய்தி யங்கே
சங்கிலித் தொடக்குண் டாருக் கிங்கொரு சார்வுண் டோநீர்
கங்குலின் வந்து சொன்ன காரிய மழகி தென்றார். (கூசுகூ)

நாதரு மதனைக் கேட்டு நங்கைநீ நம்பி செய்த
வேதங்கண் மனத்துக் கொள்ளா தெய்திய வெகுளி நீங்கி
யேதக வொழிதற் கன்றோ நுன்னையான் வேண்டிக் கொண்ட
தாதலின் மறுத்தல் செய்ய வடாதென வருளிச் செய்தார். (கூசுச)

அருமறை முனிவ ரான வையரைத் தையல் லார்தாங்
கருமமீ தாக நீரிக் கடைத்தலை வருகை மற்றும்
பெருமைக்குத் தகுவ தன்றா லொற்றியூ ருறுதி பெற்றார்
வருவதற் கிசையே னீரும் போமென மறுத்துச் சொன்னார். (கூசுரு)

நம்பர்தா மதனைக் கேட்டு நகையுமுட் கொண்டு மெய்ம்மைத்
தம்பரி சறியக் காட்டார் தனிப்பெருந் தோழ னார்தம்
வெம்புறு வேட்கை காணுந் திருவிளை யாட்டின் மேவி
வம்பலர் குழலி னார்தா மறுத்ததே கொண்டு மீண்டார். (௧௪௬)

ஆதரைப் போக விட்டு வரவுபார்த் திருந்த தொண்டர்
நாதரை யறிவி லாதே னன்னுதல் புலவி நீக்கப்
போதரத் தொழுதே னென்று புலம்புவார் பரவை யாரைக்
காதலி லிசைவு கொண்டு வருவதே கருத்துட் கொள்வார். (௧௪௭)

போயவன் மனையி னண்ணும் புண்ணிய ரென்செய் தாரோ
நாயனார் தம்மைக் கண்டா னன்னுதன் மறுக்கு மோதா
னுயவென் னயர்வு தன்னை யறிந்தெழுந் தருளி னார்தாஞ்
சேயிழை துனிதீர்த் தன்றி மீள்வது செய்யா ரென்று. (௧௪௮)

வழியெதிர் கொள்ளச் செல்வர் வரவுகா ணாது மீள்வ
ரழிவுற மயங்கி நிற்ப ரசைவுட னிருப்பர் நெற்றி
விழியவர் தாழ்த்தா ரென்று மீளவு மெழுவர் மாரன்
பொழிமலர் மாரி வீழ வொதுங்குவார் புன்க ணுற்றார். (௧௪௯)

பரவையார் தம்பா னம்பி ஆதராம் பாங்கிற் போன
வரவணி சடையார் மீண்டே யறியுமா றணையும் போதி
லிரவுதான் பகலாய்த் தோன்ற வெதிரெழுந் தணையை விட்ட
வுரவுநீர் வெள்ளம் போல வோங்கிய களிப்பிற் சென்றார். (௧௫௰)

சென்றுதம் பிரானைத் தாழ்ந்து திருமுக முறுவல் செய்ய
வொன்றிய விளையாட் டோரா ருறுதிசெய் தணைந்தா ரென்றே
யன்றுநீ ராண்டு கொண்ட வதனுக்குத் தகவே செய்தீ
ரின்றிவள் வெகுளி யெல்லாந் தீர்த்தெழுந் தருளி யென்றார். (௧௫௧)

அம்மொழி விளம்பு நம்பிக் கையர்தா மருளிச் செய்வார்
நம்மைநீ சொல்ல நாம்போய்ப் பரவைதன் னில்ல நண்ணிக்
கொம்மைவெம் முலையி னுட்குன் றிறமெலாங் கூறக் கொள்ளாள்
வெம்மைதான் சொல்லி நாமே வேண்டவு மறுத்தா ளென்றார். (௧௫௨)

அண்ணலா ரருளிச் செய்யக் கேட்டவா ரூரர் தாமுந்
துண்ணென நடுக்க முற்றே தொழுதுநீ ரருளிச் செய்த
வண்ணமு மடியா ளான பரவையோ மறுப்பா ளுங்க
ளெண்ணவா ரடிமைக் கென்ப தின்றறி வித்தீ ரென்று. (௧௫௩)

வானவ ருய்ய வேண்டி மறிகட னஞ்சை யுண்டீர்
தானவர் புரங்கள் வேவ மூவரைத் தவிர்த்தாட் கொண்டீர்
நான்மறைச் சிறுவர் தம்மைக் காலனைக் காய்ந்து நட்டீர்
யான்மிகை யுமக்கின் றானு லென்செய்வீர் போதா தென்றார். (௧௫௪)

ஆவதே செய்தீ ரின்றெ னடிமைநீர் வேண்டா விட்டாற்
பாவியேன் றன்னை யன்று வலியவாட் கொண்ட பற்றென்
னோவுமென் னழிவுங் கண்டீர் நுடங்கிடை யவள்பா லின்று
மேவுமா செய்யீ ராகில் விடுமுயி ரென்று வீழ்ந்தார். (௧௫௫)

தம்பிரா னதனைக் கண்டு தரியாது தளர்ந்து வீழ்ந்த
நம்பியை யருளா னோக்கி நாயின்ன மவள்பாற் போயக்
கொம்பினை யிப்போ தேநீ குறுகுமா கூறு கின்றோம்
வெம்புறு துயர்நீங் கென்றார் வினையெலாம் விளக்க வல்லார். (௫௦௬)

மயங்கிய நண்ப ருய்ய வாக்கெனு மதுர வாய்மை
நயங்கிள ரமுத நல்க நாவலூர் மன்னர் தாமு
முயங்கிய கலக்க நீங்கி யும்மடித் தொழும்ப னேனைப்
பயங்கெடுத் திவ்வா றன்றோ பணிகொள்வ தென்று போற்ற. (௫௦௭)

அன்பர்மேற் கருணை கூற வாண்டவர் மீண்டு செல்லப்
பின்புசென் றிறைஞ்சி நம்பி பேதுற வோடு மீண்டார்
முன்புடன் போதா தாரு முறைமையிற் சேவித் தேகப்
பொன்புரி சடையார் மாதர் புனிதமா ளிகையிற் சென்றார். (௫௦௮)

மதிநுதற் பரவை யார்தா மறையவர் போன பின்பு
முதிர்மறை முனியாய் வந்தா ராரெனை முதல்வ ராகு
மதிசயம் பலவுந் தோன்ற வறிவுற்றே யஞ்சிக் கெட்டே
னெதிர்மொழி யெம்பி ரான்முன் னென்செய மறுத்தே னென்பார். (௫௦௯)

கண்டுயி லெய்தார் வெய்ய கையற வெய்தி நீங்கின்
றண்டர்தம் பிரானார் தோழர்க் காகவர்ச் சிப்பார் கோலங்
கொண்டணைந் தவரை யானுட் கொண்டிலேன் பாவி யேனென்
றொண்சுடர் வாயி லேபார்த் துழையரோ டழியும் போதில். (௫௧0)

வெறியுறு கொன்றை வேணி விமலருந் தாமாந் தன்மை
யறிவுறு கோலத் தோடு மளவில்பல் பூத நாதர்
செறிவுறு தேவர் யோக முனிவர்கள் சூழ்ந்து செல்ல
மறுவில்சீர்ப் பரவை யார்தம் மாளிகை புகுந்தார் வந்து. (௫௧௧)

பாரிடத் தலைவர் முன்னும் பல்கண நாதர் தேவர்
சேர்வுறு முனிவர் சித்த ரியக்கர்க ணிறைத லாலே
பேரரு ளாள ரெய்தப் பெற்றமா ளிகைதான் றென்பாற்
சீர்வளர் கயிலை வெள்ளித் திருமலை போன்ற தன்றே. (௫௧௨)

ஐயரங் கணைந்த போதி லகிலலோ கத்து ளாரு
மெய்தியே செறிந்து சூழ வெதிர்கொண்ட பரவை யார்தா
மெய்யுறு நடுக்கத் தோடு மிக்கெழு மகிழ்ச்சி பொங்கச்
செய்யதா ளிணைமுன் சேர விரைவினாற் சென்று வீழ்ந்தார். (௫௧௩)

அரியயற் கரியார் தாமு மாயிழை யாரை நோக்கி
புரிமையா லூர னேவ மீளவு முன்பால் வந்தோ
முருகலர் குழலா யின்ன முன்புபோன் மறாதே நின்பாற்
பிரிவுற வருந்து கின்றான் வரப்பெற வேண்டு மென்றார். (௫௧௪)

பெருந்தடங் கண்ணி னாரும் பிரான்முன்பு மிகவு மஞ்சி
வருந்திய வுள்ளத் தோடு மலர்க்கரங் குழன்மேற் கொண்டே
யருந்திரு மறையோ ராகி யணைந்தீர்முன் னடியேன் செய்த
விருந்தவப் பயனு மென்ன வெய்திய நீரோ வென்பார். (௫௧௫)

துளிவளர் கண்ணீர் வாரத் தொழுதுவிண் ணப்பஞ் செய்வா
ரொளிவளர் செய்ய பாதம் வருந்தவோ ரிரவு மாறா
தளிவரு மன்பர்க் காக வங்கொடிங் குழல்வீ ராகி
யெளிவரு வீரு மானா லென்செய்கே னிசையா தென்றார். (௩௬௬)

நங்கைநின் றன்மைக் கேற்கு நன்மையே மொழிந்தா யென்று
மங்கையோர் பாகம் வைத்த வள்ளலார் விரைந்து போகத்
திங்கள்வா ணுதலி னாருஞ் சென்றுபின் னிறைஞ்சி மீண்டா
ரெங்களை யாளு நம்பி தூதர்மீண் டேகு கின்றார். (௩௬௭)

வேறு.

ஆதியு மேலு மாலய னாடற் கருளாதார்
தூதினி லேகித் தொண்டரை யாளுந் தொழில்கண்டே
வீதியி லாடிப் பாடி மகிழ்ந்தே யிடைகின்றார்
பூதியி னீடும் பல்கண நாதப் புகழ்வீரர். (௩௬௮)

அன்னவர் முன்னும் பின்னு மருங்கு மணைவெய்த
மின்னிடை யார்பா லன்பரை யுய்க்கும் விரைவோடும்
சென்னியி னீடுங் கங்கை ததும்பத் திருவாரூர்
மன்னவ னாரம் மறையவ னார்பால் வந்துற்றார். (௩௬௯)

அன்பரு மென்பா லாவி யளிக்கும் படிபோனா
ரென்செய்து மீள்வா ரின்னமு மென்றே யிடர்கூரப்
பொன்புரி முந்நூன் மார்பினர் செல்லப் பொலிவீதி
முன்புற நேருங் கண்ணிணை தானு முகிழாரால். (௩௭௦)

அந்நிலை மைக்கண் மன்மதன் வாளிக் கழிவார்தம்
மன்னுயிர் நல்குந் தம்பெரு மானார் வந்தெய்த
முன்னெதிர் சென்றே மூவுல குஞ்சென் றடையுந்தாள்
சென்னியில் வைத்தென் சொல்லுவ ரென்றே தெளியாதார். (௩௭௧)

எம்பெரு மானீ ரென்னுயிர் காவா திடர்செய்யுங்
கொம்பனை யாள்பா லென்கொடு வந்தீர் குறையென்னத்
தம்பெரு மானுந் தாழ்குழல் செற்றந் தணிவித்தோ
நம்பி யினிப்போய் மற்றவ டன்பா னணுகென்ன. (௩௭௨)

நந்தி பிரானார் வந்தருள் செய்ய நலமெய்துஞ்
சிந்தைய ளார்வங் கூர்களி யெய்தித் திகழ்கின்றார்
பந்தமும் வீடு நீரருள் செய்யும் படிசெய்தீ
ரெந்தை பிரானே யென்னினி யென்பா லிடரென்றார். (௩௭௩)

என்றடி வீழு நண்பர்த மன்புக் கெளிவந்தார்
சென்றணை நீயச் சேயிழை பாலென் றருள்செய்து
வென்றுயர் சேமேல் வீதி விடங்கப் பெருமாடம்
பொன்றிகழ் வாயிற் கோயில் புகுந்தார் புவிவாழ. (௩௭௪)

வேறு.

தம்பிரா னார்பின் சென்று தாழ்ந்தெழுந் தருளான் மீள்வா
ரெம்பிரான் வல்ல வாறென் றெய்திய மகிழ்ச்சி யோடும்
வம்பலர் குழலார் செம்பொன் மாளிகை வாயி னோக்கி
நம்பியா ரூரர் காத னயர்ந்தெழுந் தருளும் போது. (௩௭௫)

முன்றாயி லுணர்ந்து சூழ்ந்த பரிசன மருங்கு மொய்ப்ப
மின்றிகழ் பொலம்பூ மாரி விண்ணவர் பொழிந்து வாழ்த்த
மன்றல்செய் மதுர சீத சீகரங் கொண்டு மந்தத்
தென்றலு மெதிர்கொண் டெய்துஞ் சேவக முன்பு காட்ட. (௧௭௬)

மாலைதண் கலவைச் சேறு மான்மதச் சாந்து பொங்குங்
கோலகற் பசுங்கர்ப் பூரங் குங்கும முதலா யுள்ள
சாலுமெய்க் கலன்கள் கூட்டச் சாத்தும்பூ ணாடை வர்க்கம்
பாலன பிறவு மேந்தும் பரிசனன் முன்பு செல்ல. (௧௭௭)

இவ்வகை யிவர்வந் தெய்த வெய்திய விருப்பி னோடு
மைவளர் நெடுங்கண் ணாரு மாளிகை யடைய மன்னுஞ்
செய்வினை யலங்கா ரத்துச் சிறப்பணி பலவுஞ் செய்து
நெய்வளர் விளக்குத் தூப நிறைகுட நிரைத்துப் பின்னும். (௧௭௮)

பூமலி நறும்பொற் றாமம் புனைமணிக் கோவை நாற்றிக்
காமர்பொற் சுண்ணம் வீசிக் கமழ்நறுஞ் சாந்து நீவித்
தூமலர் வீதி சூழ்ந்த தோகையர் வாழ்த்தத் தாமு
மாமணி வாயின் முன்பு வந்தெதி ரேற்று நின்றார். (௧௭௯)

வண்டலாங் குழலார் முன்பு வன்றொண்டர் வந்து கூடக்
கண்டபோ துள்ளங் காதல் வெள்ளத்தின் கரைகா ணாது
கொண்டநா ணச்சங் கூர வணங்கவக் குரிசி லாருந்
தண்டளிர்ச் செங்கை பற்றிக் கொண்டுமா ளிகையுட் சார்ந்தார். (௧௮0)

இருவருந் தம்பி ரானார் தாமிடை யாடிச் செய்த
திருவருட் கருணை வெள்ளத் திறத்தினைப் போற்றிச் சிந்தை
மருவிய வின்ப வெள்ளத் தழுந்திய புணர்ச்சி வாய்ப்ப
வொருவரு னொருவர் மேவு நிலைமையி னுயிரொன் றானார். (௧௮௧)

ஆரணக் கமலக் கோயின் மேவிப்புற் றிடங்கொண் டாண்ட
நீரணி வேணி யாரை நிரந்தரம் பணிந்து போற்றிப்
பாரணி விளக்குஞ் செஞ்சொற் பதிகமா லைகளுஞ் சாத்தித்
தாரணி மணிப்பூண் மார்பர் தாமகிழ்ந் திருந்த நாளில். (௧௮௨)

நம்பியா ரூரர் நெஞ்சி னடுக்கமொன் றின்றி நின்று
தம்பிரா னாரைத் தூது தையல்பால் விட்டா ரென்னு
மிம்பரின் மிக்க வார்த்தை யேயர்கோ னார்தாங் கேட்டு
வெம்பினா ரதிச யித்தார் வெருவினார் விளம்ப லுற்றார். (௧௮௩)

நாயனை யடியா னேவுங் காரிய நன்று சால
லேவுமன் றிதனைச் செய்வான் றொண்டனா மென்னே பாவம்
பேயனேன் பொறுக்க வொண்ணாப் பிழையினைச் செவியாற் கேட்ப
தாயின பின்னு மாயா திருந்ததென் னாவி யென்பார். (௧௮௪)

காரிகை தன்பாற் செல்லுங் காதலா லொருவ னேவப்
பாரிடை நடந்து செய்ய பாததா மரைக ளோவத்
தேரணி வீதி யூடு செல்வது வருவ தாகி
யோரிர வெல்லாந் தூதுக் குழல்வரா மொருவ ரென்று. (௧௮௫)

